கில் தான் சொல்லப்படுகின்றன. 100 கட்டி கொண்டது ஒரு பீக்கல், அதாவது 133/13 பவுண்டுக்குச் சமம்.

சீனரின் முக்கியப் பிரச்சினை எப்படித் தம் குழந்தைகளுக்கு உணவளிப்பது என்பதே. ஒரு டஜன் குழந்தைகளிருப்பது அவர்கள் குடும்பங்களில் பொதுவான பண்பு. குழந்தைகளைப் பெற்றோர்கள் எண் வரிசைப்படி அழைப்பதும் அவர்கள் மரபு.

சீனரின் புத்தாண்டு விழாவன்று நான் சிங்கப்பூரில் இருந்தேன். அன்று அவர்கள் தம் உறவினரையும் நண்பர்களையும் காணச் சென்றனர்; பழைய கணக்குகளைத் தீர்த்தனர்; சிவப்புப் பூக்களை வாங்கினர். பெண்கள் தலையலங்காரக் கடைகளுக்குச் சென்று தம்மீது பல பூச்சுக்களைத் தடவிக்கொண்டனர்; பல நாட்களுக்கு முன்பே பல் இழந்தவர்கள் அன்றுதான் தங்கப்பல் கட்டிக்கொண்டனர்.

I. **பொருள் கூறுக** :—

பாஸ்போர்ட். வங்குசா.

II. **விடை எழுதுக** :—

1. ஆசிரியர் உடல் நிலையை அதிகாரிகள் ஏன் சோதிக்கவில்லை ?
2. இந்தியாவைக் குறித்து மலேயா அரசியலார் கருதுவது யாது ?
3. சிங்கப்பூர் துறைமுகம் சிறப்புடையது என்று கூறக் காரணம் யாது ?
4. சிங்கப்பூரில் சுங்கவரி விதிக்கப்படும் பொருள்கள் எவை ?
5. போருக்குப்பின் சிங்கப்பூர் எத்தகைய நிலையில் இருக்கின்றது ?
6. ஆசிரியர் மலேயா நாட்டைப்பற்றி அறியத் துணை செய்தவை எவை ?
7. ராபில்ஸன் நினைவுச் சின்னங்கள் சிங்கப்பூரில் இருக்கக் காரணங்கள் எவை ?
8. செம்புத்துவான் எனப்படுவது எது ?
9. ஜப்பானியர் சிங்கப்பூருக்கு வைத்த பெயர் யாது ?
10. ஆசிரியர் சிங்கப்பூரில் கண்ட சிறந்த இரண்டு கட்டடங்கள் எவை ?
11. ஆசிரியர் சிங்கப்பூரில் கண்ட மூவுலகங்கள் எவை ?
12. ரோங்கிங்-என்பது யாது ? அதைப்பற்றிச் சிறு குறிப்பு வரைக.
13. சிங்கப்பூரில் இருப்பவை எவை ? இல்லாதவை எவை ?
14. 'பாவா சீனர்' – யாவர் ?
15. சீனரின் முக்கியப் பிரச்சினை யாது ?
16. சீனர் புத்தாண்டு விழாவை எவ்வாறு கொண்டாடுகின்றனர் ?